௧

திருவேல் துணை.

பக்தமான்மியம்

# அரங்கேற்றல்வைபவம்

திருவாமாத்தூர்

முருகதாசப்பிள்ளை

இயற்றியது.



விபவ௵ மகரரவி.

உ

குரு துணை.

# பக்தமான்மிய
# அரங்கேற்றல்வைபவம்

இஃது

திருவாமாத்தூர்க் கௌமாரமடாலயம்

மஹான் வண்ணச்சரபம்

ஸ்ரீமத் - தண்டபாணிசுவாமிகள் பௌத்திரரும்

தி. மு. செந்திருபகப்பிள்ளை குமாரருமான

தி. செ. முருகதாசப்பிள்ளையினால்

இயற்றப்பட்டு

திருவாமாத்தூர்க் கௌமார சபையாரால்,

சென்னை 'கேசரி' அச்சுக்கூடத்தில்

பதிக்கப்பெற்றது.

விபவ௵ மகாசி.

குருவே துணை

# சிறப்புப்பாயிரம்.

திருவாமாத்தூர்
போர்ட்டு பாடசாலையின் தலைமை உபாத்தியாயர்
ந. ஜெ. அருணாசலம் பிள்ளையவர்க ளியற்றியது

---

சீரியர்சூழுஞ் சிரவணபுரத்திற் றிகழிராமானந்தக்குருவின், பேரியல்பமைந்த பெருந்தவனாகிப் பிறங்கியற் கந்தசாமிப் பேர், வாரியிலெழுந்த பத்தமான்மிய நூல் வளங்கொள்கௌமாரமாசபை யிற்,கூரியகுணத்தோர் குழுவினிலவன்வாய் கொண்டரங்கேற்றினன் மாதோ. (௧)

அப்பெருவிழவை யருந்தவமுடையோ ரறிந்துசென்றுளமகிழ் கொண்டா, ரொப்பறுகுரவன் காட்சியுங்கண்டா ரோதரும்பயனென விண்டார், கைப்படுநெல்லிக் கனியெனவவற்றின் கவினெலாங்காட் டுதுமென்று, முப்பழச்சாறே யெனமுறைமையினான் மொழிந்தனன் முதிர்தமிழ்க்கவியாய். (௨)

நூலரங்கேற்ற லடியவரடிசி னுகர்ந்திடலாலயசேவை, மாலரங் கற்காப் பொருள்வழங்கிடுவோன் வள்ளன்மைமண்ணொடுபொன்னிற், சேலரங்கண்ணார் திரத்தினின்மயங்காத் திறனுடையடியவர்செய லுஞ், சீரைங்கணிப்பட் டாபிடேகஞ்செய் சிறப்புமாதிய திகழ்ந் திடவே. (௩)

பத்தியிற்சிறந்த மெய்த்தவர்போற்றும் பண்புறுமாதைமாநகர் வாய், முத்தமிழ்கொழித்த முருகதாசப்பேர் முனிவரன்மைந்தனா வுதித்தே, சித்தமார்செந்தி னாயகப்பேர்கொ டேசிகன்றிருவுள மகிழ, வைத்தபேரன்பா னற்சுதனாக வளங்கொளவந்துதித்தவனே,

உதித்தவிவ்வுலக ருவப்புடன்புகழு முரிமைகொண்முருகதாசப் பேர், பதித்திடப்பாலச் சடங்கியல்பனைத்தும் பண்புறவியற்றிய பரிவா, விதித்தருகல்வி யொழுக்கத்திற்சிறந்து நிலவுநனருள்பெறு நிலையிற், கதித்திடுகுணத்தைக் கண்டவர்மகிழ்வார் கடையனேன் கழறிடற்குமோ. (ரு)

நுண்ணியவுணர்வ னூல்பலபயின்றே னுணங்கியகேள்வியில் வல்லோன், வண்ணமும்பாடும் வல்லவனடியார் வாரிசப்பதமலர்ப் பொடியைத், திண்ணமாச்சூடுந் திறற்கவுமாரத் திரத்தினிற்றிளைத் திடுந்தெளிவோன், மண்ணிலென்போன்றோர் மதிமயக்கனைத்து மாற்றிநல்லறிவுதந்தருள்வோன். (சு)

பத்தமான்மியமா நூலரங்கேற்றல் பகரும்வைபமெனுமிதனை
யுத்தமர்வினவி யுளமகிழ்கூர்வ ரொருங்குநல்லற்புதமடைவர்
நத்திடும்புலவர் நன்றுநன்றென்பர் நவையுடையார்நலந்தெரியார்
சத்தியமாமிந் நூலின்கணியானுஞ் சார்ந்துசித்தமுண்மகிழ்ந்தேனே.

முற்றிற்று.

# குருபாதமே கதி.

உ

குருவே துணை

# பத்தமான்மிய

# அரங்கேற்றல்வைபவம்.

## பாயிரம்

### சற்குருதுதி

சித்தர்போற்றிய சிரவணபுரத்திரு மடத்திற்
பத்தமான்மிய நூலரங்கேற்றல்வை பவத்தை
மெத்தவின்புற வியன்றமிழ்க்கவிகளால் விளம்பச்
சுத்த ஞானரா மானந்தன்றுணையடி தொழுவாம். (க)

### அடியவர் துதி.

யாவரெங் கெவ்வாறெண்ணி யிறைஞ்சினுமவ்வவர்க்கும்
பாவனைப் படியேநின்றுபயன்றரும் பரமேமநந்தம்
பாவநீங் கிடவந்தாண்டபதக்குரு பரனென்றோர்ந்தீதார்
சேவடித் துணைகளன்பாற் றினந்துதித் திடுவாம்யாமே. (உ)

### அவையடக்கம்.

பத்தரதுமான்மியநூல் படித்தரங்கேற்றிபவிபவம் பகருமாவல், சித்தமிசைகொண்டடியேன் றெரிந்தட்டிற்சொலத்துணிதலன்றிச் சேரு, மத்தனையுஞ்சொல்லிமுடித் திடுந்தரமில்லேன்சிறிதே யறைந்திட்டாலுஞ், சத்தநயத்தமிழ்ப்புலவர் கிளிசொன்மொழியனையதெனத் தழுவுவாரே. (ங)

பாயிர முற்றிற்று.

---

# நூல்

திருவிளங் குபூ மகண்முகநேர் தமிழ்த் தேயத்
தொருபகுப்பதாய் மலைவளநகர்வள முயர்ந்தோர்
மருவிநின் குடி வளம்பயிர்வளம்பல வாய்ந்து
பொருவில்பேரைநற் பழனிநன்முருகன்றன் பூண்டி. (௧)

அருணையூர்க்கிளிப் புலவன்றனுளத்தினி லவாவும்
பெருமைசான்றசெங் கோடவிநாசிசீர்ப் பெருக்க
மருவுகாவிரி வளைதருகொடுமுடி மற்றும்
பொருவில்வெஞ்சமாக் கூடலாதிய தலம் பொருந்தி. (௨)

வயங்குகொங்குநாட் டிடைவளர்கோவையென் வண்மை
தயங்குசோயமுத் தூர்வடதிசையினிற் சார்ந்து
நயங்குலாவிய பதிகளிற்சீர்த்ததாய் நல்லோர்
முயங்குமேன்மைய தாய்க்கழைபூகமே முதலாய். (௩)

தென்னைவாழைமா பலாத்திகழ்பொழில்களுஞ் செழித்த
புன்னைகோங்குமந் தாரைசெண்பகநிரை பூவின்
மன்னைநேரிரோ சாமுல்லைமல்லிகை மருவித்
தன்னைமீக்கொள்வா சஞ்செய்நந்தனங்களுந் தழைக்க. (௪)

வாய்ந்திலங்கிய சிரவணபுரத்திற்கௌ மாரர்
தோய்ந்துவாழ்மடா லயத்தொடுமும்மதத் தூநீர்
பாய்ந்தவானைமா முகற்குமெய்ப்பரமன்பா லோர்சொ
லாய்ந்துகூறிய குகன்சாளத்தின்மே லாய. (௫)

தண்டபாணிமூர்த் திக்குமாலயங்கணற் றவச்சீர்
கொண்டநற்கனகத்திருச்சபைமுதற் குயிற்றி
வெண்டரும்பர ஞானபிட்டையிலமர்ந் தெண்ணி
றொண்டர்கட்கொரு பெருங்குருநாதனாத் துலங்கி. (௬)

என்னைநேரிளம் பக்குவத்தினர்க்குநன் றிசையப்
பொன்னைநேருப தேசவாசகமழை பொழிபு
பன்னைநேரிரா மானந்தக்குரவன தருளான்
பின்னைநேர்சக மாயைவன்றொடக்கற வென்றோன். (௭)

கல்விசத்திய மொழுக்கமாதியநிறை கனத்தோன்
பல்விதப்படு சமயருமொப்பிடும் பான்மை
யொல்லியன்குரு பரன்பரமாமென வுணர்ந்து
நல்விதித்தொடர் பாங்கவுமாரமே நடந்தோன். (அ)

அரியநற்றவம் புரிந்தநுபூதியிற் சமைந்தோ
னுரியசெந்தமிழ்ப் புலவர்தஞ்சிகாமணி யுயர்ந்தோர்
தெரியமேவிய கந்தசாமிப்பெயர்ச் சீலன்
பிரியமார்துணை யாயெனக்கிருந்திடும் பெரியோன். (௯)

சேயகாவியந் தானைவெண்ணீறுவன் சிகைகிண்
மேயகோவண மக்கமாலிகைவியன் வலக்கைத்
தூயகங்கணங் கொடுகவுமாரர்தந் தொகைமுன்
றேயவற்புத வமுதெனப்புகர்தினந் தோறும். (௧0)

சமரசம்பெறு பிரசங்கமவ்விடை சார்ந்தோர்
தமதுநெஞ்சக முருகிடச்சாற்றிடுந் தகையோன்
யமகமேகபா தங்களும்புலமைப் பிளேர்பார்
தமர்நடுங்கிடு சந்தமுமெளிதுசாற் றிடுவோன். (௧௧)

குருபரன்றிருச் சரிதைசந்தத்தினிற் கூறிப்
பொருவிலாவலங் காரச்சிந்தென்றோர்நூல் புகன்று
பருவரற்றுடைத் தாளவிநாசியப் பனுக்கு
மருவிடுஞ்சிவைக் குந்தமிழ்ப்பனுவல்கள் வகுத்தோன். (௧௨)

தனது சற்குரு பரன்குருபரனெனத் தழைத்துக்
கனமிடித்தெனப் பகரும்வண்ணக்கவிச் சரப
ணனசஞானமெய்ச் சமாதிகொண்மாதைபூ ரடைந்து
மனமுவந்திடத் துதித்துமெய்யருட்பயன் வாய்த்தோன்.(௧௩)

புகலுமிவ்வணஞ் சிரவணபுரமடம் பொருந்திக்
ககனமீதொளிர் பூரணமாமதி கடுப்ப
நிகழுநாளையிற் குருபரன்கருணையு ணிறைந்து
சகமுளார்பலர் தேறுவால்பகர்ந்தவுத் தரவை. (௧௪)

சிரசின்மீதுறக் கொண்டுபாற்கடன்மிசை சேட
னுரமிகுத்தபா யெனத்துயினாரண னுபய
சரணவாரிசத் திடைமிகுபத்திசார்ந் தவராக்
கரணவாதைதீ ரப்பெறுபரமபா கவதர். (௧௫)

ஆ[illegible] [illegible]முதலியமெய் யறிவு
தொ[illegible]க் [illegible]டாறாற்றெண்மர்சீ ருலங்க
[illegible] [illegible]வடசொலில் விண்ட
[illegible]சந்திர [illegible]ரும்பெயரினன் சிறப்பும். (கசு)

[illegible]கொண்டர்தந் தொகையும்பாயிரத்துடன் பகர்ந்தே
[illegible]கொண்ட ராந்தொறாற்றெண்மர்சீர் கூறிப்
பி[illegible]கதி யாறநுபந்தமாப் பேசித்
[illegible]வழ்சகத் திரமுந்நூற்றெழுபத்தோர் தமிழ்ப்பா. (கஎ)

[illegible]த்தமான்மியக் குரவன்சீர்பலவயி னிலவச்
சித்தமான்மியச் சந்தயாப்பிடையிடை திகழ
[illegible]த்தமான்மியக் கரப்பிரான்றிருவரு ளாணுகப்
பத்தமான்மிய மெனும்பெருங்காவியம் பகர்ந்தான். (கஅ)

*சேயைச்சந்ததஞ் சிந்தனைசெய்திடி னுமது
வாயைமீறியுந் தமிழ்ப்புதுக்கவிபல வருமென்
றுயமுத்தமிழ்ச் சரபதேசிகனோர்கா லறைதற்
கேயநல்லிலக் கியமிவனெனக்கொள லிசைவே. (ககூ)

வேறு.

வளம்படு மந்நூல்செய்து வருமிடைக் காலத்தூடே
சளம்படார் பரவுகண்ணன் சற்குரு வருளுமென்னே
ருளம்பெறு மவர்முன்செய்ய வுற்றபுண் ணியமுமுண்மை
விளம்பருட் கவுமாரச்சீர் மேயதன் மடாலயத்தே. (உ0)

சுக்கிர வாரந்தோறுந் தோய்சபை யிடையேமேவு
மக்கிர கண்ணியத்தோ ரதிவிருப் புஞ்சேர்பண்பா
ஈிக்கின தரும்பாகேபோ லியல்பிர சங்கஞ்செய்தான்
புக்கிருந் தோர்தநெஞ்சிற் புகழ்ப்பத்தி ஞானம்பொங்க. (உக)

இவணரங் கேற்றுநாளி லியலெழிற் சீரகத்தத்
தவலமோ வியநெஞ்சத்தோ டனிர்மரு தாசலப்பேர்த்
தவன்மன முவந்தரங்க சாமியாஞ் சீலனன்பாற்
புவனியோர் தெரியவச்சிற் பொருத்தவுத் தரவுபெற்றே. (உஉ)

* சேய் - முருகன்

சிரவண நகரந்தன்னிற் செல்வமன் பொழுக்கங்கல்வி
காவலு முதாரமாதி கவின்றநற் புகழ்ச்சிறேனிக்
குரவருக் கினிமையோனுக் குலவிச்சுப் பய்யனென்பேர்
பரவுநற் பழனிப்பேர்கொள் பண்பினன் றன்பாற்கூற. (உ௩)

தனதுநல் விதிமையமாறுத் தனிப்புகழ் தன்னைவாய்க்கு
மனகநற் செல்வந்தன்னு லவிருநற் பயனையன்கு
கனமனத் தெண்ணிநன்கு கழறினை யானளிக்குங்
கனகநீ கொண்டுவேண்டுங் கவினெலாஞ் செய்தியென்றான். ( )

அறைந்தவா சகங்கேட்டன்னு னளவில்பே ருவகைகொண்டா
னிறைந்தவப் புண்ணியச்சீர் நிலவிய பொருளினாலே
குறைந்திடாக் கருணைக்குன்றாங் குருபரன் மகிழ்வாலாசி
யறைந்ததும் புலவர்பத்தி யமைந்துளோர் தம்மாலோதும். (உ௫)

பாயிரமானசாத்து கவிகளும் பதிபுமாசான்
றேயிசைக் கந்தசாமி துலங்குபாண் டுரங்கனாக
மேயிலங் கிடுமோர்மூன்று விதவெழிற் படங்கள்சேர
மாயிருங் கேசரிப்பேர் மருவுநல் லச்சுக்கூடம். (உ௬)

சென்னையம் பதியிற்கொண்டு திகழுஞ்சுந் தரப்பேர்ச்சிலன்
பொன்னைநே ருளத்தன்பத்தி பொலிமறை யவர்குலத்த
னன்னைநே ரிராமானந்த வருட்குரு பரன்சொலாசி
தன்னைபேற் றிட்டோன்சுற்றுந் தடையின்றிப் பதிக்குநாளில். ( )

சதுர்த்தியும் விசாகமுஞ்சேர் தகைபநா ளுதித்தமாண்பால்
விதுத்தகைக் கணேசன்சேயென் வியன்கலை யானஞான
முதுக்குறை வமையிராமா னந்தமா முனிவன்சொல்லான்
மதுத்துள வலங்கலான்றன் மலரடித் தொழும்பர்காதை. (உ௮)

துலங்குகா வியங்கொள்பட்டா பிடேகத்தின் றுவக்கமேபோற்
கலந்தசீர்க் கணபதிப்பேர்க் கவின்பதிக் கணேசன்றன்சீ
ரிலங்கிய யமகஞ்சந்த மெழின்மரு தாசலஞ்சேர்
நலங்கொள்வேள் புனையலங்கா ரத்தொடை யமகநாட்டி. (உ௯)

வேணுகோ பாலனென்ன விளங்குருண் மாயன்மீது
பூணுறழ் சந்தப்பாடல் புகன்றுள வவற்றையெல்லாங்
காணுமா றச்சிலேற்றிக் கணபதி நகரினூடு
தோனுசீ ரோதியப்பன் றேய்ந்ததன் பொருளினாலே. (௩௦)

நன்குறு வரங்கேற்றற்சீர் நடத்தெனக் கந்தசாமி
யின்குணப் பெரியோனன்பா லெழின்மரு தாசலத்திற்
றன்குண மகன்றமேலோர் புடையக மகிழ்ந்துபோற்ற
முன்குலாய்ப் பலபொருட்சீர் மொழிந்தரங் கேற்றிமீண்டான்.

பாடுத லொருபாலச்சிற் பதிப்பித்த லொருபாற்றன்கை
யேடுகொண் டெழுதிச்சென்னைக் கினிதுய்த்த லொருபால்வந்து
கூடுநற் சபையோர்கேட்கக் கூறுத லொருபாற்சிந்தை
நாடுமெய்த் தியானம்பூசை நடத்துத லொருபாலாக. (௩௨)

பத்தமான் மியநூன்முற்றும் பாடியே முடித்திட்டச்சும்
புத்தகப் பணியுநன்கு பூர்த்தியா யினவக்கால
மெத்தவே யரங்கேற்றற்சீர் விளம்பர மெழுதிபின்சொன்
முத்தமிழ்க் கவிதைத்தண்ட பாணிமாமுனிவனன்பால். (௩௩)

தன்னன விராமானந்தத் தவனருட் பாண்டுரங்க
னென்னமே வியபடங்க ளியலமிக் கிறும்பூதியாரு
மன்னவச் சிட்டப்பறபல் வளநகர் வாழுஞ்செல்வர்
மன்னவர் புலவர்பத்தர் மடாதிபர் பலர்க்குமுய்த்தார். (௩௪)

வேறு

பத்திரிகைவரப்பெற்ற பலநாட்டுத்தொண்டர்களும் பாவலோரு, நத்தியமெய்த்தவசிகளுஞ் செல்வர்களும்பெருமகிழ்வு நண்ணினோராய்ப், பத்திபுடன்சிரத்தணிந்து கண்ணிலொற்றிப்பூசித்துப் பரிவில்வாசித், தத்தினமேதங்கடங்கள் விவகாரங்களைமறந்தங் கடைந்தோர்தாமும். (௩௫)

தக்கவேற்பாடுசெய்து வந்தோருந்திருவருளின் றன்மையாலே, மிக்கவேநடைபெறுமென் றொருவழிப்பட்டுற்றொரு மிகநடந்துந், தொக்கவிடைபரிபுகையர் திரசகடத்திவர்ந்தும்வந்தார் தொண்டர்போற்றப், புக்கவிராமானந்தக் குரவனருள்விபாபகச்சீர் பொலிவதாகி. (௩௬)

தவபணமுந்தமிழ்மணமுங் கமழ்வதுவாய்ச்சந்ததமுஞ் சார்ந்தோர்க்கெல்லாம், பவவகங்காரத்தோற்ற மறச்செய்தன்பாம்விதைபனத்திற் பதியச்செய்தே, யவமறுமெய்யருளுதிக்கச் செயுஞ்சீர்க்கௌபாரபடா லயத்தின்சார்பாய்த், தவலருநலன்பரேலா மொருமைப்படுபனத்தினராச் சார்ந்தார்மாதோ. (௩௭)

பரமகுருநாதனிரு பாததாமரையுளத்திற் பதித்தஞானம், விர வுதவக்கொழுவிலுறு பிரமானந்தக்குரவன் விளங்குஞ்சீருந், மூரமுனி யுந்தென்னைகமு கம்பைமுதலிய தருக்க ஞானவமேவி, வானமுனிவர் தேவர்சித்தர் பலர்கூடித்தவமியற்றி வயங்குஞ்சீரும். (கஅ)

அஞ்சுபூதங்களுக்கு முதிப்பிடமாம்பிரணவம்ப லலங்காரச்சீர், மிஞ்சுபலமயில்வடிவாத் தோகைவிரித்தாடியொலி விளைக்குஞ்சீரு;மந் சுதவழருணைநகர்த் தவனிகரஞ்சுகங்கான்பர் வழுத்துஞ்சந்த, செந் சுவப்பாற்கேட்டாமோ திப்பனபோற்கொஞ்சிமிக நிலவுஞ்சீரும். ()

இன்பமெனப்புகுந்துசசி யோடமராவதியிலுறு மிந்திரன்றன், முன்பவுணற்காப்பயந்து கோகிலமாப்புவியினிடை முயங்கியிந்த, துன்பமின்றுபோகவிருப் பின்றசுரர்பயமுமின்று சுகமேயென்னுங், கொன்பகர்வபோற்குயில்கள் கிளியருகு பயில்வளமை கொண்ட சீரும். (உ0)

குயிலருகஞ்சுகமிருந்து கூவுதகையருணகிரிக் குரிசிலந்நாள், வெயில்விடுபொன்னூர்த்தருவின் மலர்கொளநான்வந்தெனதிர் விளம் பக்கண்டே, யயிலவன்கண்ணருள்கொளளை யிந்திரநீபங்குறமா றறைந்தாயொப்பா, தெயில்வளைதென்னருணையடைந் தேனதன்றாஞ் வறிந்தெனல்போன் றிலங்குஞ்சீரும். (உக)

தங்குகனகச்சபைமேற் பத்திவைராக்கியஞானத் தகைமை யாகப், பொங்குபுகழ்ச்சிகரமொரு மூன்றையுங்கண்டன்பிகப் பொருந்தினோரா, யெங்குமுரோமஞ்சிலிர்ப்பப் பரவசராப்பன்முறை வீழ்ந்திறைஞ்சிப்போற்றி,நங்குதவிரடியவர்க ளனைவோருமகிழ்வுந்து நண்ணினரே. (உஉ)

வடதிசைநோக்கியமுகப்பு வாசலிடையலங்கார விதானம்வாய்ப் பத், திடமிகுபந்தருங்கமுகு கூந்தலரம்பைகளிளநீர் திகழக்கட்டிப், படர்பசுமாவிலைதிகழ்தோ ரணத்தினைவேதாந்தசித்தாந் தச்சிற்பான் மை,யுடனிலவுகால்களமைத் ததன்மிசையவ்விரண்டுமொன்றாவொ ளிருமுண்மை. (உ௩)

விரவுசமரசங்கலந்த ஞானம்போல்வெண்பலகை மீதுநாளும் வரவுசெலவற்றநிலைப் பத்தர்மான்மியப் பெருநூன் மாட்சியாவும் பரவுசிரவணபுரத்திற் பகர்கவுமாரச்சபையிற் பதிந்துவைகிக், காவு தவிரன்பர்நன்கு கேண்மினெனுங் †கவிதையிலைக்கண்டாமாதோ.

† பத்தமான்மியத்தமிழ்ப் பாரகாவியம் - வித்தகச்சிரவணபுரத்தின் மேதகு, சுத்த கௌமாரமா சபையிற் றொண்டர்கள், வைத்த பேரன்புடன் வந்து கேண்மினே.

பெண்பிள்ளைகளைப்பேண லுழவுகொடுபயிர்முயற்சி பெருக்கல்சாமான், கொண்டுவிற்றன்மணஞ்சாவுக் கேகன்முதலுலகநெறி கூர்ந்நின்றே, கண்டுபுனைகரக்குரவ னருள்வளஞ்சேர்பத்திரிகை சம்பாதிப்பதக், கண்டுமுளந்துணிந்துவரா துழன்றுதம்முரிடை பிருந்து கவின்றார்சிலரோர். (௬௫)

அங்கவரவ்வாறமையக் கவுமாரசபைக்குமிகு மணுக்கராகிப், பங்கமறுகிராமத்தப் பதியிரங்கசாமியன்பன் பகர்நஞ்சப்பன், றங்கமலிசிரவணவூர் வெங்கடசாமிப்பெயரோன் றுலங்குசீர்த்தித் துங்கநீசம்பமுனிப்பேர்த் தூயன்முதலோர்மகிழ்ச்சி துதைந்தாராகி

தண்டபாணிக்கடவுள் சித்திமகோற்சடமூர்த்தி சந்நிதானத், தெண்டருங்கௌமாரசபை யம்மனுலயமுகப்பி லிசைபொன்மன்றிற், கொண்டகுடதிசைத்திருவா யிலின்முகப்பிற்குலவுவடக் காமடத்திற், றெண்டரெலாமதிகவியன் றேய்தருகாவணச்சிறப்புத் துலங்கச்செய்தார். (௬௭)

சுக்கிரவாரப்பிரசங் கப்புகழ்கொள்கவுமாரத் தொல்சபைக்கண், மிக்கிலகும்வத்திரத்தாற் பூவகையாலலங்கார வியன்பூந்தன்றாற், சக்கினுக்கொர்விருந்தேபோற் சமைத்தரியதமிழ்க்கவியுட் சார்ந்துமேலாப், புக்கிருக்குமரும்பொருளைப் புலவர்பலர்க்கெளிதுணர்த்தல் போல்வதாக. (௬௮)

மிகவாழ்ந்தநீரினையந் திரக்குழலான்மேற்கொணர்ந்து வேண்டுமாறு, தகவேகைகால்சுத்தி செயன்முதலாஞ்சௌகரியஞ் சார்ந்துமேலோர், சுகமேவவருவியென வாங்காங்குமமைத்தனர்மெய்த் தொண்டர்நெஞ்சி, னிகழ்மூலாதாரமுற்கொ டியர்ந்தவறுபவம்பகருநெறியும்போலும். (௬௯)

வருமெயடியவர்மகிழச் செய்சமாராதனைக்காம் வகைகள்சேர்த்தே,பொருவிலருட்கணபதிவேற் குகன்றளியில்விசேடநிவேதனியம் பூமாலை, மருவவமைத்தனர்கற்பி லருந்ததியேநிகரான வண்மை தோய்ந்து, திருமகள்பாரதிவிமலை நிகர்மடவார்சபையினிலுஞ் சிறந்த கோயில். (௭0)

மூழுவதினுங்காவியினன் மாவதனற்கோலவகை முதிரச்செய்தார், செழுவும்விபவப்பெயர்கொ ளாண்டுவைகாசித்திங்கள் ளிளர்பன்னொன்றாந், தழுவுதினங்குருவாரம் பூசமுஞ்சேர்தினங்காலை தண்டபாணி, பழுதில்சித்திமகோற்சடன்வா முலயத்தில்விசேடமுறப் பரியனங்கள். (௭௧)

குழைமுடிநீடகமலன் காரநிலேவதனமாதி தூரிற்றிபன்பார்
பலவிதவாத்தியமுழங்கப் பத்தமரன் றிய நாலைப் பதிபுரன்பர்
குலமிறைஞ்சுகுருபரன்றன் றிருவுருவப்படத்தினுடன் றுளிர்விமானத்
திலகுறப்பூவலங்கார மிகக்கற்பூரத்தீப மெடுத்துச்சுற்றி. (௫௨)

அடியாரரவொலிமுழங்கி யானந்தமுறப்பவனி யமைகோலத்தோ
டொடிவில்கவுமாரசபை யெய்திவிமானத்தினிறோ ருபர்பீடத்தே
படியவமைத்தரியவிசே டப்பூசையாற்றியபின் பலதொண்டர்க்கு
மிடிசிறிதுமின்றிமகே சுரபூசையியற்றியிகு மேன்மைதோய்ந்தார். ( )

வேறு.

பின்னரிரா மானந்தப் பெரியோன்றன் னருளுரையா
லின்னருட்கெள மாரசபை யினிற்றொடர்ச்சி யாப்பபடித்து
மன்னமிக வேயமைந்த வண்கதிரின் றூரம்பித்
தின்னபடி நடத்துவதென் றியலற்கைப் பத்திரத்தை. (௫௪)

வாசித்துச் சுந்தரப்பேர் மாமுனிவன் மாண்பமைப்ப
பூசித்துத் தருமருமைப் புத்தகத்தை களிற்றூக்கி
நேசித்து வடதிசையாய் நிகழுறுகாற் பீடத்தி
லாசித்துப் பஞ்சணையிட் டதின்மான்றோ லாலமைக்க. (௫௫)

ஆதனத்தின் மீதிருந்தே யாண்டருள்சற் குருபரன்றன்
சீததா மரைப்பாதஞ் சிந்தித்துத் தோத்திரமு
நீதமுறு நூற்காப்பு நிகழ்த்திப்பிம் பாசிபத்தர்
போதவருட் கதிமுதலாப் புகலுதற்குத் துவக்கினரே. (௫௬)

தண்டபா ணிக்குரவன் றனதருமைத் தனயனெனத்
தொண்டனென வென்றனக்குத் துலக்குதந்தை யெனவிந்த
மண்டலத்துப் புலவர்சிகா மணியென்ன மன்னுபுகழ்
கொண்டசெந்தி லூபகப்பேர்க் குரிசிலுமங் குடனமர்ந்து. (௫௭)

கையேடு கொடுபடிக்கக் கந்தசாமிப் பெரியோன்
பொய்யேய்ந்த வுலகமயல் புந்தியினிற் பொருந்தாரா
மெய்யேறு மன்பரொலா மெய்மறந்தா னந்தமுறக்
கையேய்ந்த வாமலகக் கனியெனப்ப லுவமானம். (௫௮)

உவமேயம் பொருந்திடவே யுரைத்தரங்கேற் றினனங்கு
தவமேனாள் செய்குந்திறத்தாற் சார்ந்துகண்டு கேட்டோர்தம்
பவவேரற் றொளிர்ஞானப் பரபோக வநுபூதி
சிவமாகிக் கலக்குமுத்திச் சீருமுறத் தடைபின்றே. (௫௯)

கண்டவர்கண் ணூலதனைக் கனிவுடன்கேட் டவர்செவியாற்
கொண்டவக்கூட்டத் தினிடை குலவினோர்தேகத்தால்
வண்டமைபூந் தொடைபன்னீர் மணமுகர்ந்தோர் நாசியினால்
விண்டவர்தம் வாயினான் மிகுபயன்பெற் றனரம்மா. (கூ0)

பிரசங்கத் தினுக்குரிய பீடத்தின் மீதிலையி
னரசங்கம் பணி ராமானந்த குருதேவ நமவென்
றரசங்கக் குறியாய்நன் கசைந்திடு *பங் காவினெழில்
வரசங்கத் தினரையிங்கு வம்மினென்றல்போன்றதுவே. (கூக)

பற்றறும்பற் பலவடியார் பரவிமன மொருவழியா
வுற்றிடச்சித் திரத்தெழுதி யுறுதீபம் போலமைந்து
பெற்றசெவி வாயாகப் பிழைதவிர்நெஞ் சேவயிறுய்ச்
சொற்றபோ தனையான சுவையினையுண் டின்புற்றார். (கூ௨)

காரைக்கா லம்மையெளவை கவின்றிலக வதியம்மை
சீரைச்சேர் வாசுகியார் திகழுமங்கை யர்க்கரசி
யாரைப்போ லுறுமடவா ரனைவருமன் பமைந்துற்றார்
யாரைத்தா னன்பிலரென் றியம்பிடுத லவண்மாதோ. (கூ௩)

தெய்வத்தின் றிருவருட்சீர் திகழ்ந்திடப்பத் தர்களுளத்தின்
மெய்வைத்த பத்திவைராக் கியஞானம் விளங்கநன்றாக்
கைவைத்த வாடியெனக் கழறிவிளக் குந்ததியிற்
பொய்வைக்கா வுளச்சீலம் பொருந்துகண்ணப் பப்பெயரோன்

சொல்லுமகு டத்தொலியுஞ் சூழ்கணநாதப்பெயரோ
னெல்லுமன்ப ரெதிர்மகுட மோதொலியும் புவிமுதலாம்
பல்லுலக முஞ்செவிடு பட்டிடும்பண் பினிலமைந்த
வெல்லுதய மாமுனெழுந் தியனியம முடித்தப்பால். (கூரு)

வேறு

ஆலய தெரிசனுதி யாற்றிப்பி னுணவுச்செய்கை
யேலவே முடித்திட்டன்பா விசைபத்த மான்மியப்பேர்
நாலமை பொருளைக்கேட்ட நண்ணியர் தாமும்பீட
மேலமைந் துரைத்த கந்தசாமி வித் தகனுமுன்னாள். (சுகூ)

---

* பங்கா-காற்றசைக்குங்கருவி

நேமியங் கானத் தூடே நிலவிய முனிவரென்றுந்
தாமிறை யாகியட்டா தசபுரா ணங்கள்சாற்றிப்
பூமியோர் புகழநின்று பொலிதரு முனிவனென்று
நாமிசைத் திடிற்றடுக்கார் நாமக ளனையாரம்மா. (கள)

முற்பகல் பிற்பகற்கண் மொழிந்தனர் பிரசங்கந்தா
னெற்படர் போதுபோத லினைபுறி கில்லாராகிப்
சொற்பர மானந்தத்தே தோய்ந்திடு மன்பர்கொள்ளப்
பற்பல விதச்சிற்றுண்டி பதிந்தசட் சுவைகொளன்னம். (கஅ)

காலைநண் பகலிராவாக் கழறுமுப் போதுந்தங்கள்
வேலையீ தென்றுகொண்டு விழைவுடன் படைத்தேயுள்ளம்
பாலநே ரிரங்கசாமிப் பத்தன்சுப் பய்யனென்போர்
மேலையின் றவத்தாற்றங்கள் வியனுடற் பயன்பெற்றாரே. (கக)

இவையிவ்வா றுகநாளு மியன்றன குறைபிலாதே
குவைபடு பத்தர்சீர்த்தி கூறுகா வியத்தினூடு
நவைதவிர் பகுதியான நலஞ்சில வெடுத்துக்கூறல்
சுவையென வெனது நெஞ்சிற் றுலங்குவ சிலசொல்வேனே. (எ0)

வேறு

அன்பெனுங்கடலி லமிழ்ந்தமீராபா யணியிரதிமதிசபரி
துன்பறுவிதுர மங்கைபாஞ்சாலி துலங்கிரத்தினவதி *ரங்கி
யின்பமையிராச கன்னிகர்மாபா யிசைபெறுவேசிபாபத்தி
கொன்பதிந்திலகு கன்னிகாத்துவயர் குலவுமெஞ்ஞானமே வடிவாய்.

அமைகரமௌதி யம்மைபாம் பன்முன் றருட்கதை யுலகபோ கத்திற், குமைதலற்றருட்செல் வத்தினிற்றிளைத்துக் கூறியபொது விதியாகச், சமைவதாம்பேடு நீங்கிபேபிறப்பு சார்குவதரிதெனறண ந்து,சிமையநேர்பத்தி ஞானமெய்திடுமேற் சிறந்ததேயெனத்தெளிப் பனவே. (எஉ)

எத்தகைத்தீய வொழுக்கத்தோரேனு மெவ்விதக்காரணத் தேனு, மைத்தகைபெறுநா ராயணனுமம் வழுத்திடப்பெ ற்றவர்மறலி, கைத்தலத்தடையா தரியவைகுந்தக் கதிகொள்வாரெனற்கசாமிளன் றன், சுத்தமெய்க்கதைசான் றுகுமுள்ளன்பாற் சொல்பவர்க்கென் னுரைப்பதுவே. (எங)

---

* ரங்கி-சூத்திர தம்பதிகதியிலுள்ள ரங்கனது மனைவி.

அம்பரீடனெழிற் சந்திரகாச னரிச்சிபிருக்குமாங்கதனுட், றெடம்பமைமயூரத் துவசன்பாஞ்சாலன் றிகழ்ந்தசாத்துவிகன்பிம்பாசி யம்பாமீதுஞ் செலத்தகுகுலசேகரன்முதலரசர்கள்சரித, மிம்பரார் விழையும் பொருட்செல்வமிகுதி பெய்தினோரதனிடைமயங்கி. (௭௪)

அப்பொருட்செருக்காற் பத்திஞானங்கட் கருகராகா ரெனநூல் கள், செப்பொருமொழியைத் தாண்டிநற்றவத்திற் சிறந்தமாதவர் களுமதிக்க, மெய்ப்பொருளாய பத்தியுணிறைந்தே வியனுறுமாடல் களியற்றி,யெப்பொருளினுமே லாயமுத்திப்பே றெய்தினரென்பதை யிசைக்கும். (௭௫)

குசேலர்போசலர்கர் மாபாபிசரிதங் குலவுசத்தியபத்தியாலே, விசேடமின்றித்தஞ் சத்தியினளவின் மிகக்குறைபொருளோநல்கிடி னும், பசேலெனவுற்ற மேனிமாலருட்சீர் பாலிப்பானென்பதை நாட்டி, யசேதனத்தகைதோய்ந் தவர்க்குநல்லறிவை யளித்திடத்தக் கனவாமே. (௭௬)

மராமராவென்னச் செபித்துமோரருமை மருப்புசாளக்கிராம மெனப், பராவுபூசையியற் றியுமுடைத்திடுகற் பகுதிதெய்வங்களா மென்ன, விராவுசில்லுடன்பில் லெனன்மறையென்ன விண்டும்வான் மீகிநற்கனுப்பே, ருராவியற்பத்தன் கன்னிகாத்துவய ருரைத்திடுகுர வன்வாய்மொழியை. (௭௭)

சத்தியமெனக்கொள் பண்பினன்மேன்மைத் தவப்பயனுஞ் சித்தியுடனன், முத்தியுமடைந்தா ரென்பதைநன்கு மொழிந்துமெய் புத்தமர்தேரப், பத்திசெய்தையங் திரிவகன்றுய்யப் பண்ணிடுமருந் தனையனவென், றுத்திசற்றுடையார் களுஞ்சொல்வார்மறுப்போர்க் குவமையிவ்வுலகிடத்திலேயே. (௭௮)

மறுவில்சற்குரவன் றன்பதத்தொண்டில் வாய்ந்துறுமன்பர்கடம் மை, யுறுதுயர்கொள்ள மறக்கருணையினு லொறுத்திடப்பெறினுமங் கவர்க்கு,மறுமையுந்துணையாநின்றறக்கருணை வயக்கொண்டருள்செய் வானென்கை, யிறுதிதீர்குருபத் தியிற்சிறந்துற்ற விரவிதாசரின் கதி ரிபம்பும். (௭௯)

இழிகுலத்திடையே பிறந்துளோரெனினு மிசைபத்தியுறு மெனிற்சீலம்பொழியுமேற்குலத்தோர் பலர்களும்வணங்கும் புகழ்ச்சி தோய்வாரெனற்சான்றுக், கழிவில்சீர்ச்சேனு பத்தியின்கதியுங்

களினும் வேசியாபத்திகதியு, மொழியலாந்தெய்வ வருள்பெறச்சாதி முறைகொடென்னாவதுமன்றே. (அ0)

மரணகாலத்திற் சிறியதோர் பொருளில் வாஞ்சைசற்றமைந் திடப் பெறினுங், கரணவாதனைதீர் முத்தியெய்திடற்குக் காணுறுந் தடையதால் வீட்டுக், காரணமாயமை நிராசையைக்காப்ப தறிஞருக் கவசியமென்னை, சிரணமார்புகழ்ச்சோசிபத்தன்பெருமை கிளத்து நற்கதி தெரித்திடுமே. (அக)

தெய்வத்தின்வசமா வுற்றமெய்த்தொண்டர் சீலமிற்றெனச் செக மயக்கி, லுய்வதற்றுழல்வோர் தாஞ்சிறிதேனு முண்மைதே ராதவமதிப்பர், செய்வதாகியமெய் யருள்விளையாட றெரிந்தபின் வணங்குவரெனலை, மெய்வயங்கியதா மாசிதுக்காராம் விளங்கருட் சீரேகநாதர். (அஉ)

மிக்கசீர்த்திகொண்ஞானேசுரர்முதலா மேவியகாதைகள் விளக்கும், புக்கதா மொவ்வொர் கதிகளினீற்றிற் பொருந்துபாவினும் பத்தர் தமக்குத், தக்கவாறுமுன் னின்றருள் செய்த தாமரைத்தடங் கண்மாயவன்றான், றெருக்கமுன்னிலையிற் றனக்குமெய்யருட்சீர் துலக்குசற்குருபரனாகி. (அங)

தோன்றருள்பொலிரா மானந்தப்பெயர்கொ டியனேயென்னுநிச் சயங்கொ, டென்றதோத்திரமா லைக்கவித்தொகைதா னினியகேள மாரநன்னெறியா, மான்றசற்குரவன் றனைப்பரமெனநன் கறிதருமரு ளநுபூதி, சான்றவருணரத் தெரித்திடுஞானத் தனிவிளக்கென்பது தகுமே. (அச)

இத்தகைமகிமை பற்பலவமைந்தே யிலகுபத்தமான்மியநூலை, யொத்தமைபுளத்தொண் டர்கள்வினவிடநன் றுரைத்திடுதவக் கந்தசாமி, சுத்தவெண்கமலத் தவிசுறைகலைமின் றுணையினாற்குரு பரனடியுள், வைத்தமாட்சிமையாற் கடன்மடைதிறந்த வாறெனப் பொழிந்தனன் மகிழ்ந்தே. (அரு)

வேறு

குறித்த சபையினதுபத்தாந் தினத்தினிற் பிற்பகலிற்
குலவியஞானேசுரர்சீர் கூறிமுடிவிலதாச்
செறித்தபுகழ்த்துக்காரா மரின்கதியைமறுநாள்
செப்புவதாயுரவநகாச் சேரும்விளாங்குறிச்சி

செறித்தசைசோலையத்திற் கொருவனைப்பிற்செய்த
        கேவலருக்குமனிசத்ய பாமைசமேதமதா
மரித்தவிர் செட்டருள்வேணு கோபாலன்வடிவா
        முற்சலவிக்கிரகமன்ப ரொளிர்சபைக்கனுய்த்தார். (௮௬)

அதுகண்டபத்தரர வொலிசெய்தக மகிழ்ந்தா
        ரடுத்ததினமாயபன்னென் ருநாட்காலையினின்
மதுதங்குபூந்தொடையால் வத்திரத்தாற்சீர்த்தி
        வயங்குறுமாறலங்கார மியற்றியவைத்தலையா
விதுவொன்ற முளக்கருணைக் கண்ணனைப் பூசித்தே
        வியன்கொள்சபையாரம்பஞ் செயுந்ததியின்மேலாம்
* புதுவெண்பாவொன்றெந்தை யாக்குலவுமுரிமைப்
        புகழ்ச்செந்திறையகப்பேர்ப் புனிதனுளத்துவப்பால். (௮௭)

சிரவணபுரத்திலருள் குலவு கந்த சாமிச்
        சிலனியற்றிய பத்தமான்மிய காவியச்சீர்
பரவடியர்பலருமெளி துணர்ந்துய்யுமாறு
        பாண்டுரங்கப்பெருமான்விக் கிரகவடிவாகி
விரவருட்சீர்ப்பொலிவமையக் காட்சிதந்தானென்றுமெய்
        விளங்கவுரைத்தனன்சபையோர் வியந்தனரன்னதற்பின்
கரவகலுந்துக்காரா மப்பெரியர்காதை
        கழறுங்காற்றுவாதசமாங் கவியிலவர்மரபில் (௮௮)

மூதாதையாயவிசு வம்பரர்தங்கனவின்
        முகுந்தனுற்றேகாதசிப முன்னியெட்டுமாத
ந்தாமெனப்பண்டரிப்பேர் நிலவுதலத்துறலா
        னின்னூர்க்கியானின்றுவந்து நேர்ந்தேனென்றுரைத்து
மீதானவிக்கிரகவடிவாயவ்வாறே
        விளங்கியமைந்தனனென்ன விளம்புமொழிபவையோர்
காதாரக்கேட்டுவந்தின் றுங்கண்ணனமக்குக்
        காட்சியளித்தனனிங்கு மாட்சியுறவென்றார். (௮௯)

---

* சிரவணபு ரத்திலருட் சீர்க்கந்த சாமி
பரவுபத்த மான்மியத்தின் பண்பை-விரவும்
பலர்க்கு முணர்த்தவெழிற் பாண்டுரங்க னன்பாற்
றுலக்கமுற்றான் விம்பவுருத் தோய்ந்து.

இத்தகைத்தெய்வீகவற்பூதியையங்கவனை
விழைவுறக்கொண்டரங்கேற்றச் சபையினினடந்த
தாத்தமர்சீர்சுந்தரமா தவன்றன்மனவெளியி
லுலவுமதிசவுந்தரிய முறுவைந்தாண்டளவுங்
கொத்தவடிவுடன் றோன்றிக் கண்ணன்விளையாடி
யொளிரவிராமானந்த வரவோன்றன்கரத்தால்
வைத்தனனேரிரத்தினகி ரீடமச்செய்க்குடனே
வயங்குகண்ணன்குரவனிரு வடிவுமொன்றத்தோப. (௯௰)

தந்தோளி லுவகையுட னச்சேசைய யருகு
சார்ந்தெடுத்தே புலாவியமெய்த் தரிசனங்கண்டன்பாற்
சந்தோட மருவியவற் புதமன்ப ருணரச்
சாற்றவவ ரானந்தசலதியிடைதழைத்தா
ரந்தோவிவ் வணமறைந்தே யருளாட லியற்றி
யவிர்தெய்வம் வெளிப்படநின் றருளாமையெண்ணில்
வெந்தோடக் கலிகாலக் கொடிதோதாவான் மாக்கள்
வினைப்பயனோ வறிவறிந்த மேலவர்தேர் வாரே. (௯௧)

இவ்வகையன் னிரண்டாநா ளினிற்றுக்காராம
ரிசைக்கவிமுற் றுறுமளவி லிலங்குபன்மூன் றநா
டெவ்வமணர்ச் செயங்கொள்கவு ணியர்குலச்சம்பந்தன்
றிருமணக்கோ லத்துடனச் சாபுரத்தின் றனிபி
லொவ்வடியார் குழுவொடருட் சோதியின்முத் திப்பே
றுறுமூல நாட்குருபூ சையின்றினமா பமைந்து
செவ்வைபுறு மன்றுதயஞ் சித்திமகோற் கடற்குந்
திருக்கரத்திற் றண்டணிந்து திகழ்குகவேடனக்கும். (௯௨)

திலதயில மரிசிநெல்லி மஞ்சளின்றா ளிந்தாத்
திகழ்கெளவ்பஞ் சருக்கரைநெய் தேங்காய்தேன் கதலிப்
பலமமைபஞ் சாமிருதம் பாறயிர்தேன் பசுநெய்
பகர்கருப்பஞ் சாறுபழ வநக்கஞ் செவ்விளநீர்
குலவன்னஞ் சொன்னமிரத் தினஞ்சங்கம் வில்வங்
கொண்டசகத் திரதாரை குளிர்சுகந்த தோய
நிலவுசந்த னந்தபனங் கொண்டுவிதி முறையே
நிறையுமபி டேகமன்பர் தொழவினிது முடித்தார். (௯௩)

பட்டாடை யணிந்து சந்தனஞ்சிந் தூரம்பற்
பலவிதமாக் கனகத்திற் பதிமணிப்பூண் மவுலி
யெட்டாச்சி ருறுமுருத்தி ராக்கமணி மாலை
யினிமையுற வாங்காங்குமியைவுறுமா றணிந்து
மட்டாரு முல்லைமல்லி வனசமிரோசாவில்
வயங்கியசீர் மாலைகள்பல் வயினமையச் சாத்திக்
சட்டாக வன்னவப்ப வகைதேங்காய் கதலிக்
கனியடைக்காய் முதனிறைத்துக் கனிவினிவே தித்து. (௬௪)

அற்புதமா மலங்கார தீபாரா தனைக
ளருச்சனைதோத் திரநமக்கா ரம்பிரதக்கணங்க
ளற்புடன்செய் திடப்பூர்த்தி யினிற்றிருநீ றளித்தே
யதன்பினியற் புலவர்சிகா மணியாக்கொள மாரப்
பொற்புமலி கனகசபைத் தலைவனரு ளுரைச்சீர்ப்
பொலிவமையக் கொண்டு ப த் த மா ன் மி ய நூ ல் புகலுஞ்
சற்புருட ஞனை க ந் த சா மி முனிக் கந்நாள்
சைவவருட் கனகசபைத் தாண்டவன்வாய் மொழியை. (௬௫)

கொண்டுதிருத் தொண்டர்புரா ணம்பகர்சேக் கிழார்க்குக்
குலவுமறை வேதியர்மூ வாயிரர்செய் ததுபோன்
மண்டுமணச் சந்தனம்புட் பங்கொடலங் கரித்து
வண்சிரத்திற் பட்டாடை வயங்கவணிந் தப்பாற்
றொண்டுடையார் தொழப்பரம ஞானசிம்மா தனச்சீர்
துலக்குசெங்கோ லளித்தடியர் சூழவுளன் பினைசீ
ரண்டுபழ னிக்கவுண்டன் வரிசைகரத் தேந்தி
யருகுறச்சுந் தரமுனிவன் சபாபதிப்பே ரன்பன். (௬௬)

முதலியவ ருடன்வரச்சங் கீதவாத் தியங்கண்
முழங்கவணிக் கவுமார சபைக்கீழ்பாற் றேயற்
புதமிகுவா யிற்றலைசென் றிடராமா னந்தப்
புனிதனது திருவருளா ரமுதப்பாற்கடலி
னுதயமுறு திருமகளென் றுஞ்சரசு வதித்தா
யுருவமென்றும் பார்ப்பதியி னுயர்மூர்த்தத் தொன்று
மிதமிலருட் சீர்திகழ்மீ னும்பிகையின் சாயல்
மியன்வடிவ மென்றுமிடை யீடிலன்புமேவி. (௬௭)

முருகாவென் றுந்திருப்பே ருரைத்தாங்க மறியா
மூடமதிக் கணவனோர்கை தறிக்கவுடன் றழைப
வருகாரவக் குமரனருட் காட்சியளித் திடப்பெற்
றுயர்ந்தகந்த லோகமிசை யுவப்புடனுற் றிருந்த
பெருகாத ரப்பயன்கொள் வைசியப்பெண் மணியாய்ப்
பேசுமுரு கம்மையினோர் பிறங்கவதாரமென்றும்
வருகாமன் கணையணுகாக் கனற்பிழம்பா மென்று
மாதவவுத் தமர்தங்கை தாய்தமக்கை யென்றும். (௯௮)

சத்தியபுத் தியினுனிச் சயித்துவக்கும் பெருமை
சாரரங்க நாயகிப்பே ரம்மைகரத் தூடே
சுத்திகொள்ளும் போதகங்கொண் டருட் கந்த சாமித்
தூயனிரு பதமலரிற் றேய்வுறப்பெய் ததற்பி
னத்திமங்க ளார்த்தியெடுத் துவப்புடன்வாழ்த் திடலு
நண்ணுமன்பர்மருடநவின் றலர்வகையா லுற்ற
பத்திரத்தான் மழைபொழியக் கவுமார சபையின்
பாற்படர்ந்தா ராகவதன் மேற்படர்ந்த பகர்வாம். (௯௯)

வேறு

தந்ததானதன தந்ததானதன தந்ததானதன தந்தன.
அம்பொன்மாசபையி லொன்றுமாரியன மைந்தஞானகொலு வின்கணே
நம்புமாதவர்த நெஞ்சினூடுதிகழ் நம்பிரானுளருண் மிஞ்சலால்
வம்புறுதபல தொண்டர்சூழவரு மைந்தனையபுகழ் துன்றியே
சம்புநேரவரு கந்த சாமி யெதிர் தண்டுசேர்கரமி லங்கவே. (௧௦௦)

தாத்ததானதன தாத்ததானதன தாத்ததானதன தாத்தன.
யாட்சிதோயவிரி வாக்குலாவுசிகை வாய்த்தகாவியிடை தோய்த்ததா
நீட்சிமேயகலை யாற்றன்மேனிமிசை நேர்த்தியார்கவச மேற்கவே
யாட்சிநீறுநுத லேற்றதோர்திலக மாற்றியேசபையை நோக்குமா
காட்சிமேவுமெனு மூக்கமோகைபல காற்கொள்சிரடியர் கூட்டமே.

தந்ததத்ததன தந்ததத்ததன தந்ததத்ததன தந்தன.
இந்திரப்பதவி வந்திடப்பெறினு மிஞ்சைசற்றுமுயல் கின்றிலார்
வந்திறப்புழு சளங்கெடக்கதிவ ழங்கிடப்பெறுகி னும்புலால்
வெந்திடத்தினவி சைந்திடற்கரிய விஞ்சையுற்றவர்வ ருந்தவோர்
செந்தினைக்கொல்கிலர் கங்கணக்கைகொடு சிங்கமொத்திலகு மொய்ம்
பரே. (௧௦௨.)

தானதத்ததன தானதத்ததன தானதத்ததன தானனா.

[illegible]தப்பன்மத முடுநத்துமவ ரோகைபற்றுமுரு வாகியே
[illegible]தநிப்பமொரு வாமுதற்பரமெய் வீறுடைக்கரும னாலினோர்
[illegible]துசெப்புவருண் மேவுபத்தியினர் மாதவத்தினிலை யோவிடார்
[illegible]சப்பரம ஞானமுத்தர்சம சிர்படைப்பமெனும் வீரரே. (௧0௩)

தய்யதத்ததன தய்யதத்ததன தய்யதத்ததன தய்யனா.

வையமுற்றரசு செப்சிறப்புறினு மையலிற்பொய்மொழி சொல்விடார்
வையலர்க்குருகு செய்கையற்றரிய தல்லியிற்கருது துய்மையோர்
[ம௦௦ருமு
கொய்யலர்த்தொகுதி தெய்வமுற்சொரியொர் கொள்கையிற்சிறிது
ருய்யமற்றோர்துணை யில்லைசற்குரவ னுள்ளபற்றெனவிண்மெய்யரே.

தன்னதனதன தன்னதனதன தன்னதனதன தன்னனா.

தம்மதுடறவ மன்னவுறலினோர் தன்னமுனாவொகொ டெண்ணமே
னம்மதெனநினை புன்மையகல்பவர் நண்ணுகுருபரன் மண்ணினா
டம்பலமறை தன்னையுயிரின மண்ணுமறிவள வுன்னவே
செம்மையுளமிசை துன்னுதயைகொடு செய்ம்மெய்நலமெனும்
வண்ணரே. (௧0௫)

தனதானதத்ததன தனதானதய்யனா.

பலவாமதப்பிரிவு கொளுநூலுநத்துபொருள்
பகர்போகமுத்தியென லலதேது மில்லையோர்
பரமாயருட்சகள வடிவாகிலைத்தகுரு
பதவாரிசத்துணைய விருபேறுநல்குமோர்
தலமாகுமக்குருவை நினைசீரின்மிக்கதொரு
தவம்வானகத்துமிலை யுளதாகவெஃகுவோர்
தனதாகநிச்சயமெய் திடின்மேவுபக்குவம
தனைநேரவுற்றதென வமைவாகியுள்ளமே
துல்வாதநட்பினொடு தழுவார்வமிக்கலகி
துயர்ஞானவிற்பனமே யநுபூதிமல்கிநீ
டுலகோர்பிதற்றுகதை நிசமாமதித்தணுவு
முளமேன்மயக்கமுட னுழலாதுகள்ளறு

வளர்நாவமுத்தாவித கவிமாரபத்தர்பவ
 ரருள்வாழ்வுபெற்றிலகும் வளைமேருவில்லிமா
யவிமாடகரபைகொள் குடவாயிலிற்கவிஞரி
 ரருளேறைதயப்பொலிவி லுயர்சேவைநல்கினேன். (௧௦௬)

தந்ததானதனா தந்தனதனா

ஐந்துமாவியமு முங்கிளைவோருபா
 லன்பர்நால்வர்தமிழ் விண்டவரொருபா
லுந்துசோணகிரி யன்புகழ்பகர்வோ
 ரொன்றுகிருதநட னஞ்செய்வரொருபா
லந்துமாதரவு டன்கருதிடுமோ
 ரன்பினாலிருக ணின்புனலுகவே
நந்துபோதமற நின்றவரொருபா
 னன்குவீழ்பவர்க ளும்பலர்நிசமே. (௧௦௭)

தன்னதந்தன தத்தனதானதன

சென்னையின்கண லச்சிடுசாலைமிகு
 திண்ணமொன்றந டத்திடுசீலன்மன
மன்னையென்றவி ரக்கமுளான்மிகுமெ
 யன்னுசுந்தர நற்பெயர்வேதியனோர்
தென்னைவண்பொழில் சுற்றியமாதைவளர்
 சின்னயன்சர பக்குநமேவுதனி
தன்னைநம்புமி லக்குமிநாரணனுய்
 தன்மைவெங்கட சுப்பன்முனைநலோர். (௧௦௮)

தந்ததானன தந்தனதனா.

வந்துபாதம்வ ணங்கிநலநளாம் வண்பயோததி யென்றவிர்குர வோ, னுந்துபேரருள் கொண்டகவைதிரா யொன்றினர்பல தொண் டர்களுயவே, தந்துநீடுபொன் மன்றினனருகார் தண்கௌமாரகன் மன்றினையடைகான், முந்துமாயன்வி ளங்கிருமனையா மொய்ம்பர் சேவைபு ரிந்தனனினிதே. (௧௦௯)

தந்தனதந்தா தந்தனதந்தா தந்தனதந்தா தனதானா.

பந்தமகன்றோர் வந்தனைகொண்டாள் பண்பினன்வந்தா லிசைராமா
னந்தனெனும்பேர் கொண்டவன்வந்தா னங்குருவந்தான்மகிழ்வாயே
விந்தமடுஞ்சீ லங்கலைகொண்டோன் மின்பொரவந்தா னருள்வீறு
ன்மைந்தமைபொன்சேர் மன்றினன்வந்தான் மங்களமென்றா ரடியாரே.

தத்ததானன தத்தன தனனா.

...த்தி...லைப்பெறுமடியார் பற்பலோர நமக்ஷ்ச்சியெய்ப் கிடவே
...த்தியொரு மைத்தவிசுதன்மே லட்பின்மேவு சொற்றனனினிநீர்
...த்தியருனவுக்கொழிவினையே தக்கவாறமு டித்திவண்வரிரோர்
த்தியெய மெய்த்தவர்கதைநீள்பொற்பொடேலின வத்தகுமெனவே.

வேறு

அரம்பைநெட்டிலை யணிபெறவீர்வா யதுவலம்பெறப் பலபட
வமைத்தே, தரம்படுப்புடன் பலகறிவகையுந் தகைபெறும்பருப் பும்
படைத்துரிமை, நிரம்பவாதனத் தன்பினர்தம்மை நிகழவைத்தன்ன
முப்படைத்ததன்மேல், வரம்பெறும்பசு நெய்மிகப்பெய்து வாழை
மாபலா வின்கனிவகையும். (௧௧௨)

அப்பவர்க்கமுஞ் சுவையிலட்டுகமு மரியபாயசம் வடைமுதற்
பலவு, மைப்படுந்திரு மேனிபன்விருப்பும் வண்ணவெண்டயிர் வள
மையுமமைய, நெய்ப்படும்பரி மளமலர்கந்த நிகழச்சாத்தியுண் ணெகி
ழ்வுடன்றுதித்துச், செப்பருந்திரு விளக்கெதிர்தேங்காய் சிதைத்துக்
கற்பூரச் சுடர்கொடுசுழற்றி. (௧௧௩)

மெய்ப்பரன்றிரு வுருவெனக்கருதி விரும்பியர்க்கியம் விடுத்
தனர்வணங்கிக், கைப்பயன்கொளத் தொழுதுகட்பயனுக்கண்டுவந்து
முப் மகுடமோதிடலுந், துய்ப்பதாயினர் பத்தமான்மியப்பேர்த்
தூயகாவியச் செவியுணவிலைச்சென், றெய்ப்பறப்பரு குங்கருத்
தினரா யினியநாச்சுவை யினையெனுதயின்றூர். (௧௧௪)

அடிசிலுண்டுபின் சுத்திசெய்தணிநீ றணிந்துநறக்கவு மாரமா
சபையி, லடியர்யாவரும் வந்தனர்நீபா ராதனம்புரிந் தருட்கவுணியர்
கோன், முடிதுளக்கநீ லகண்டயாழ்ப்பாணன் முதிர்தமிழ்க்கியா
ழிசைபயின்றதுபோ, னெடியசின்னசா மித்தவன்கையி னிகழிசைக்
கரு வியைக்கொடுமிழற்ற. (௧௧௫)

ஐயன்பர்தண் ணுமைகையிற்றுள மியையக்கொண்டுதோத்
திரஞ்சொனூரதற்பின், றேனைநேரிசைக் கந்தசாமிப்பேர்ச் சீலன்
தேசிகன் றிருக்கோனுக்குறவே, சோணைமாமுகி லெனத்துதிகூறித்
துக்காராயர்சீர் தோய்கதைமுடித்து, வாலையீந்திடு குருவுபதேச
வசனமல்ல பூதிவாய்த்திடவும். (௧௧௬)

தண்டபாணிமா தவன்சரித் திரத்தின் சாரமாகவுந் தன்றந்
பாணுங், கொண்டசீரிரா மானந்தப்பெரியன் குலவுகாதையின் சுருக்
கத்தையமைத்தும், விண்டதன்னடிப் பிரபந்தந்தான்ற வியன்கவிக்
கணை வயங்குறக்கூறித், தொண்டர்தாமகு டத்தொளிர்முழக்கித்
தொழுதுபோற்றிடச் சொற்றனன்வாழி. (௧௧௭)

பின்னரன்பினர் தமக்கெலாஞ்சந்தம் பிறங்குநற்பனி ருதகவிபே
வீச, நன்னயத்தண்ட பாணிமாதவன்ற னபந்தபத்தினி பாஞ்சந்த
ரம்மை, கொன்னமைந்தரா மானந்தப்பெயர்த்தோய் குரவன்சுந்தர
மாதவன்முதலோர்,பன்னமேவுசாத்துகவிகள்பலவும்பரவிசெந்நிறுப
கப்பெயரந்தை. (௧௧௮

கவின்றகந்தசாமித்தன்சரிதைகலந்துகூறிய சிறப்புப்பாயி
ரமு, நவின்றுபின்கதிக் கோவையென்றடியே னபந்துகூறிய கவிக
ளோர்பத்துங், குவிந்தநெஞ்சகத் தொண்டருங்கல்வி கொடுவிரிந்த
நெஞ்சகப்புலவோரு,மவிர்ந்தவண்களிக் கடல்படிவுறுமா றரங்கிலே
றிட வறைந்தனமினிதே. (௧௧௯)

வேறு

திருவருளின்செய லான்மிகுமன்புசெ னித்திடும்வண்ணம ரங்
கேற்றும், பொருவருநற்சபை முடிவாயதுமுபர் பொற்புறுதட்டில
டைக்காய்மா, வருகதலிக்கனி தேசிக்கனிமிகு வாசப்பூந்தொடை துகி
லம்பொன், றருநகவிறுபுட் பங்கொடுநன்குச மைத்தகிரீடந பக்கந்
தம். (௧௨௰)

பன்னீர்முதலுற நற்பழனிப்பேர்ப் பத்தனிரங்கசு வாமிப்பேர்,
மன்னீதன்பொலி வாத்தியவிசைகொடு வண்மைகொள்கௌமா ரச்
சபையிற்,கொன்னீடுறவமையச்செய்ததிருள்குலவியகந்தசுவாமி
யுட, னன்னீர்மைப்பல பத்தர்தமான்மிய நவில்புத்தகமுன்னுற
வைத்தே. (௧௨௧)

சந்தனம்வண்கா வித்துகில்வாசத் தண்பூமாலைக ளுஞ்சாத்திக்
கந்தமிகும்பன் னீர்விசிறிப்பொற் கவிதைனலுமிச்சங் கனிநல்கிச்
சுந்தரமாதவ னுஞ்செந்தினிறை தோப்பெயருறுசி யனுமாகத்
தந்தகுலைகொடு புட்பகிரீடந் தன்னைமகிழ்ந்துத ரித்தாரே. (௧௨௨)

எனதுள நாட்குரு வாகுமிராமா னந்தனெம்பிரற்புக ழெனவோங்கிக்
கன்னல் பற்றக நக்குமார்க வின்றவெமென்னா ணைப்பொங்கிப்
பன்னுமுறைபடி யிப்பெயர்பெறுசுப் பய்யனெனுங்குண னிலன்றன்
மன்னமாதந்தி லங்கிசமாயுள வார்ந்திதனீடுவ யங்கிற்றால். (கஉரு)

தனது தன்மைக்கினை யிற்றலைமீதுக ரித்தபொன்மெளலித னைக்
கண்டோர், நிசமுனமிதன்பிக போகம்விரும்பிநி லத்திலிருந்துமறை
ந்திட்டார், செமனமுறமெய்க்கந்தசுவாமிவ கித்திடுபூமுடி கண்
டோர்பொன், னசலமெனத்திகழ் ஞானவிளக்கம திர்ந்துதவத்திலை
யைந்தாரே. (கஉச)

பண்ணவர்தாமுநல் விண்ணுலகாளந மலர்மழைதூவினர்மனமாரப்
பண்ணமைமங்கல வின்னிசையோதினர் பத்தர்களானந் தக்கண்ணீர்
கண்ணருவிப்பொலி விற்சொரிபான்மைந டத்தினரெங்களுளத்தன்பா
லெண்ணவமைந்தவி ராமானந்தன தின்னருள்வாரியெ ழுந்தன்றே.()

அங்குவிளங்குமெ லாரையுமுழ்கவ மிழ்த்திநனைத்தத ருட்கண்ணன்
பொங்குபுனக்கரு ணைத்திரநன்குபொ லிந்துவிளங்கிய தடியார்சீர்
பங்குபடுத்திமொ ழிந்திடவளவுப டாதுமிகுந்து பரந்திட்ட
தெங்குநாலடி மைத்திரமழகிய தெனவினிலக்கிய மிதுவாமே. ()

மஞ்சளுடன்சுண் ணமும்விரவும்புனன் மருவவணிப் பொற்கலமீதே
யெஞ்சலறக்கற் பூரச்சுடர்வைத் தெழின்மங்களவா ரதியாற்றி
யெஞ்சமறுங்கவு பூரமடாலய மன்னுதவத்தர்த மக்கெல்லா
மிஞ்சணியார்மலர் மாலைகள்சூட்டிவி யன்கலைநல்கினர் மெய்யன்பால்.

கற்பூரத்தொண்டன்றிகழ்மாணிக் கப்பெயர்மேவியெயார்பேரையினிற்
பொற்பூர்சாந்தவி லிங்கன்மடாலய புனிதவறம்பல பொலியச்செய்
தற்புடைநமிராமானந்தன டித்துணைகருதும ருந்தொண்டன்
பற்பூரித்தப னத்தடியார்கண்மு திர்ந்ததிருத்திய மைந்தாரே.

இராமசரித்திர போதியகம்பற் றியல்சடையப்பனி ருந்தந்நாள்
பராவுபொருட்குவை நல்கியுயர்ந்த பதத்திடைமேயது போலிந்நாள்
விராவியகண்ணனி ராமன்பத்தர்வி யன்கதையச்சொட ரங்கேற்ற
வுராவியபொன்னுத விப்பழனிப்பே ருற்றவன்வண்புகழ்பெற்றானே.

கந்தசுவாமியெ னும்பெயர் மேவிய கருணைத்தவன்மன திடைபேதன்
றொந்தக்குருபா னிருவாரிசபத துணைபெகருதியி நந்திட்டான்
பிந்தத்ததியினில் விந்நாயனபிர கடனப்பேர்ப்பந் திரமென்பா
சந்தப்புலவர்க ளின்புற்றிடும்வகை சாற்றியவற்கீந் தனனென்னை. ( )

அடியவரனைவரு மரகரவெனவொலி யார்வம்பொங்கிட வேபின்பின்
குடியிடமெனவளர் கந்தசுவாமிக் குணசீலனவே திகைநீங்கிப்
படிமிசைநடைகொடி ராமானந்தப ரானந்தக்கட லானன்றன்
னடியிணைபணியவ ருட்கணிறுடிப ருட்பிரசாதம ளித்தானே. (௧௩௩)

ஆயபினக்கவு மாரசபைப்பல வடியவர்தொழுதிட வமர்வுற்றே
யேயவருட்சீ ரிலகிவிளங்குமெ ழிற்கனகச்சபை தனிலேகிச்
சேயவுளத்தவ ராசன்மெய்ஞ்ஞானசி மாதனமேற்கொலு வினிலுற்றான்
மேயபலடியவர் பற்பலவிதமா மெய்யன்பொடுதுதி செய்கின்றார்.

வேறு

தனதானந்தானதன தனதானந்தானதன

அராமோகஞ்சேர்கவியி லடாதாகுப்பாழ்வினையி
லவாவேதஞ்சேர்மனமெ னநாசாரந்தோயுடலு
ணிராதாரங்கோடுநிறை நிசாமூடந்தோய்குருவி
னிலாவாமின்பாரும்வண நிலாதோடுந்தியனையர்
சராகாரங்கூடிநிசழ் சதாகாலந்தாளிணைக
டவாநேசங்காணுமுயர் தவாசாரந்தோயவரு
ளிராமானந்தாயநம விராமானந்தாயநம
விராமானந்தாயநம விராமானந்தாயநம. (௧௩௩)

பராவார்வந்தோயடியர் பலோர்நாளும்பேணியுயர்
பதாசாரஞ்சேரவிழி பசாசேயுந்தீயவினை
வராதோரஞ்சாயபொறி யயாபாசந்தோய்தலற
மகாயோகந்தேர்புனித வலோரோடின்றியானுறல்செ
யராமேனின்றுடுமுகி லனன்வேலன்பானுசிவ
னருஞானஞ்சேர்தனமி னவாம்வேழம்போலிலகி
யிராமோனங்காணவரு மிராமானந்தாயநம
விராமானந்தாயநம விராமானந்தாயநம. (௪௩௪)

சராவரயின்பான்மதலை யெனுஞ்சேவலெலன்றோதுமிரு
கணார்மால்சொலன்றோய்தலொரு விசயவானுங்கூறவிசை
யிராமாநுசயவிலை யெலாமேயின்றொடொழிய
செவ்வராவின்றோர்குருவி விசேவந்தாணவமோ
டராவெயென்றோதுசின மவாமுளுங்காமமய
லதால்வாடுந்தியரறி யொழுதாமுன் பாதமரு
விராமமென்றோதுமத மெலாமே கந்தானெனுமெ
மிராமானந்தாயநம விராமானந்தாயம. (கநரு)

சலாஞானஞ்சார்பவர்சொல் கதாசாரந்தேருமறி
விலாதேதம்பேதைமைகொ டிதேமேலென்றோதுமவர்
பலாதாரந்தாம்வறிது பராவாதுன்றுசர்பய
னெலாமேவுஞ்சீர்புரிக விராமானந்தாயநம. (கநசு)

தன தனதனதன தனதனதன தன தனதனதனன தனு.

அறுகணிசடையிறை யவரனல்விழிவரு மறுமுகமுடையசெவே
ளழகியபுயமிசை யணிசுகமுனிபொதி யையினறல்வருநதிவாய்
மறுவறுகமழ்வன நகரிடையொருசிறு மதலையினுருவுகொடே
வருபவனடிதொழு தெனையனையவர்குரு மகிமையைபுணர்தரவே
குறுமுனியமிசமொ ரெழின்மிகுபொழிலிடை குலமயினடமிடுசீர்
குலவியசிரவண புரியிடையடியவர் குறைபறவருளுபுமேன்
மறுவுமயில்கதியினை யுதவுதல்கருதிவிண் மருவினர்களும்விழைமாண்
மருவியகனகச பையில்வளர்குருபரன் மலரடிபணிகுதுமே. ()

வேறு

சிலப்பொலிமெய் யடியவர்தாந் தெரிந்துபிழைக்கத் திருக்காரத்தாற்
றீசஞ்சூரியன்சந் திரன்புவனி செறியைம்பூத வண்டவை
சோலப்பலவா றநுபவத்திற் குலவப்பெறுநல் லுண்மகளைக்
கொண்டவுள்த்தின் கருணையினாற் குறித்துப்படங்கள் பொறித்தளித்தாய்
ஞாலப்புகழ்ப்பொன் பூமகளிர் நலமேமேலென்றெண்ணிமிக
நாள்வீணினிற்போக் கித்திரிவே நலமெய்திடக்கண்ணேக்குவைபோ
லேவலப்படியுங் குழூலியர்மா லில்லார்சிரவ ணப்பதியி
லினைதீர்வனக சபக்கோலுவா மிராமானந்தப்பெருமானே. (கந அ)

மின்னேரிடைப்பா ரதிபுதனேர் மேலோர்விபக்கத் தருமறிவு
மேவியுன்சீ ரினைப்புகழ மிகுகல்வியும்வா யில்லைபெறு
தெந்நேரமும்வந் திரப்பவருக் கீபச்சாது சனருடனிற்
கினியபூசை செய்துமகிழ்ந் திடச்செல்வமும்பல் லுயிர்த்திரளுந்
தன்னேர்வனவென் றெணிச்சகமால் சற்றுமுறும லற்றொழிபத்
தானேயதுவா யுறுஞானந் தானுமடியர் பெற்றிடுமா
றென்னேரொளிசேர்காட்சியளித்திடுமுன்பெருமைசொலவெளிதோ
வெழிலார்கனக சபைக்கொலுவா யிராமானந்தப் பெருமானே().

வேறு

மலையமலையிற் குறுமுனியா வாழ்நாண்முருக னுரைமறுத்தக்
கலைகொண்டுலகி லவதரித்துக் கவுமாரச்சீர் பரவவமைத்
தலைவின்றியமெய் யநுபூதி யன்பர்க்குதவு மருட்குன்றே
கொலையும்புலையு மிஞ்சையுமில் குணத்தோருன்னைக் கூடுவரே. (௧௪௦).

சமயபேதச் சார்பினிடை தவித்துமேல்கீ ழெனப்பேசிக்
குமையுமவரு நின்னருட்சீர் குலவுமுறைபெற் றிடுவாரே
விமையவரும்போற் றிடப்பெருமை யியைந்துசமர சாநுபவ
மமைவரானு லுன்பெருமை யறைந்துமுடிக்கு மளவிற்றே. (௧௪௧).

தண்டபாணிக் குருபரன்றன் சாற்றும்விதிநூ லிலக்கணத்தைக்
கொண்டவுணர்வா லநுபூதி குலவக்கொடுநல் லிலக்கியமாய்த்
தொண்டர்பலர்க்கோர் குருவாகித் தோய்ந்தாயுன்றன் சீர்த்தியினை
விண்டன்புடன்போற் றிடுமவர்க்கும் வேறுதவமொன் றுளதேபோ

தெய்வமிலையென் றுரைப்போருந் திகழும்பிரம நானேயென்
றுய்வதறியா துறைவோரு முடலேதானென் றுழல்வோரும்
பொய்வக்கணையோ ரெனநீத்துன் புனிதப்பதவா ரிசத்துணையே
மெய்வர்த்தனையென் றிடுமறிவு விழைந்தேங்கருணை தழைந்தருளே.

கந்தசாமி யெனும்பேர்கொள் கருணைமேகத் திலுக்குனது
சொந்தவருளா ரமுதுதவித் தூயவரிபத் தரின்பெருமைச்
சந்தமலிசெந் தமிழ்மாரி தன்னைப்பெயச்செய் தவக்கடலே
யிந்தவுதவிக் குரியகைமா றியாஞ்செய்திடநிற் கென்னுளதே. (௧௪௪).

இராமானந்தப் பெயரினரி யென்றுகருதி யிருக்குமெமை
விராவுநாமமெல்லா முன் விபன்பேர்த் திருமந் திரமென்னப்
பராவியுபட் டொடுமேலாம் பரிபாகம்பெற் றிடச்செய்வாய்
நிராசைத்தவத்தோர் மதிவிசென்று நிறைபுங்கருணைக் குருபரனே.

சனகசனந்தனர் விருந்துவந்தே காட்சியளித்தா ரென்றுமப்பா
லனகப்பயன்றந் ததுட்புகுந்தே யமர்ந்தாயென்று மறிகின்றேந்
தினமுமெல்லா விடத்துமுன்றன் றிருவார்வடிவாக் கண்டுதொழச்
சனகன் முதலோர் ஞானநிலை தருவாய்பரம சற்குருவே. (கசகூ)

உன்னைவேறு முன்னிலையி லுன்னித்தொழுதல் லுணர்வாளர்
தன்னையிரண்டற் றத்துவிதப் பெருமைபடைவா ரெனல்கேட்டே
யன்னைபுறழ்நிற் கண்டுறுமில் வானந்தத்தி லதுமேலா
முன்னைமறைபா யிரத்தினுக்கு முதலாவிளங்கு முன்னவனே. (கசஎ)

வேறு

என்றுதோத்திரம் புரிந்தடியார்பல ரெழிற்கவுமாரப்பேர்
மன்றுண்மேவிடக் கந்தசாமிப்பெயர் வாய்ந்தவுத்தமன்கையாற்
றன்றமெய்ப்பழனிப்பெயரினன்முதற் றொண்டர்கள்பெறஞானப்
பொன்றுதைந்தபத் தர்கள்பெருமான்மியப் புத்தகமளித்தானே. ()

பெற்றதொண்டர்கள் குருபரன்றிருவருட்பெருக்கினையருட்கண்ணா
லுற்றபத்தவாற் சலியத்தினருமையை யுள்ளமேலுயர்பத்தி
துற்றமைந்தபா கவதர்தம்பெருமையைத் துலங்கவேதமிழ்செய்த
சுற்றனைக் கந்தசாமி மாதவன்கருணையைநனிவியந்தோதி. (கசகூ)

வணங்கித்தத்தம தூரடைந்தங்குள மானிடர்தமக்கெல்லாம்
பணங்குலாவிய வரவணைப்பரனருட் பத்தர்மான்மிய நூலை
யிணங்குமற்புதச் செயலினைச்சபையிடை யிருந்துவப்புறுமன்பர்
கணங்கொள்கீர்த்தியை யுறும்பட்டாபிடேகத்தின் கவினைச்சொற்
றின்புற்றே. (கரு0)

தாமரைத்தடத் திலையினிற்புனலெனத் தாரமைந்தர்கள்வீடு
சேமமாநிதி விளைநிலஞ்சுற்றமுந் தேகமுந்தெரிந்துற்றோர்
காமமாதிய கடந்தமெய்த்துறவுடைக் கந்தசாமிச் சீலன்
பூமகட்கணி முகப்புரைசிரவண புரத்தில் வாழ்கின்றானே. (கருக)

பெருகுபத்தமான்மியமரங்கேற்றிய பெரியவைபவந்தன்னைத்
திருநெல்வேலியூர்த் திருப்புகழ்மாதவன் சீர்ப்பவுத்திரனா
முருகதாசன்யா னிசையாற்பகர்ந்ததின் முரண்பிழைகளைநீக்கி
யுருகுமன்புகொண் டேற்பர்நல்லோரென வுரிமையிற்பணிந்தேனே. ()

முற்றிற்று.

---

வாழித்தாழிசை.

திருவருண்மலிரா மானந்தக்குரு சீமான்வாழியவே
செய்யதவக்கன கச்சபைநன்குசி றப்புடன்வாழியவே
பொருவருகந்தசுவாமித் தவன்மெய்பொ ருந்துபுவாழியவே
பொய்தவிர்பத்தர்தமான்மியமெல்லொளி போனிதம்வாழியவே
குருபரனைப்பர மாக்கொள்கௌமாரங் கொள்பவர்வாழியவே
கோதில்கலாடைவெ ணீறுகண்மாமணி குளிர்தமிழ்வாழியவே
மருவுமிநூலைக் கேட்பவரின்புகழ் மலையெனவாழியவே
வண்மைகொள்விட்டல னுமரியன்பர்கள் வாழியவாழியவே.

பக்தமான்மிய அரங்கேற்றல் வைபவநூன்
முற்றுப்பெற்றது.

---

திருத்தொண்டர் புராணமங்நாள் சேக்கிழார்பெருமான்
செப்பியரங் கேற்றுகதை யுமாபதிமாமுனிதான்
றிருத்தஞ்சேர் தமிழுதனுற் செய்தினன்பினனுளிற்
சிரவணமா புரக்கந்த சாமிமுனிவரன்றன்
கருத்தொன்றிப் புகல்பத்த மான்மியகாவியத்தைக்
கவினரங் கேற்றுமிசை கண்டவர்கேட்டுகப்ப
மருத்துன்று துளவலங்க லெனப்புகன்றன்மாதை
வளர்முருகதாசனருள் வாய்ந்த குணத்தினனே.

குருபாதமேகதி.